ஸ்ரீ சிதம்பரஞானதேசிகர்

திருவாய்மலர்ந்தருளிய

# நெஞ்சுவிடு தூது.








உ

ஸ்ரீகணபதி துணை.

சிவமயம்.

ஸ்ரீ சிதம்பரஞானதேசிகர்

# நெஞ்சுவிடு தூது.



இது
ஸ்ரீசமிவன க்ஷேத்திர மென்னுங்
கோவிலூரின்கண்ணெழுந்தருளியிருந்த
ஸ்ரீமன்
முத்திராமலிங்க ஞானதேசிகர்
பரம பாதசேகரரும்
கருணாநிதியெனக் காரணப்பெயர்வாய்ந்தவருமாய
ஸ்ரீசிதம்பர ஞானதேசிகர் மீது
ஷை தேசிகர் பாதசேகரரான
ஸ்ரீ சட்டையப்ப சுவாமிகளால்
இயற்றப்பட்டு,
ஷை தேசிகர் பாதசேகரரும்
ஷை ஆதீனத்தில்
ஞானதேசிகரா யெழுந்தருளி யிருந்தவருமாய
ஸ்ரீ இராமசுவாமி ஞானதேசிகர் பாதசேகரராய
ஸ்ரீ முத்துக்கருப்பசுவாமிகளவர்களால்

சென்னை,
கோமளேசுவரன்பேட்டை,
சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.
1910.




கணபதிதுணை.

சிவமயம்.

ஸ்ரீசங்கரபூஜ்யபகவற்பாத

ஆசாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியதும்,

வீர. சுப்பைய்ய சுவாமிகளால்

மொழிபெயர்க்கப்பட்டதுமாய

# ஸ்ரீ பிரஹ்ம நாமாவலி.



குருவணக்கம்.

வள்ளல் வீரமாதவன், றெள்ளுசீரடிக்கணே
யுள்ளமான தோயிலீ, துள்ளவா றுதிக்குமால்.

நூல்.

ஒருதரங் கேள்விமாத் திரத்தி ஞலொரீஇப்
பிரமமெய்ஞ் ஞானமே பிறக்கும் பெற்றியார்
பிரமஞா ஞவலிப் பிணைய லாமிதைச்
சருவரும் வீடுறச் சாற்று வாமரோ. 1

அசங்கனு னசங்க ஞன்மற் றசங்கனு னசங்க ஞனே
யசங்கனு னசங்க ஞன்மற் றசங்கனு னசங்க ஞனே
யசங்கனு னத்தி பாதி யானந்த வடிவ நானே
யசங்கனு ஞனே நாச மற்றவ ஞவ னன்றே. 2

நித்திய சுத்த ஞனே நிருமல விமுத்த ஞனே
மெத்தொரு வடிவி லாது மிளிரழி விலனு நானே
புத்தபூ மாவி னின்பப் புகழ்வடி வுளனு நானே
சத்திய வனந்தா னந்த வழிவொழி சதா ஞனே. 3

நித்திய வடிவ நானே நிரவத்ய வடிவ நானே
யொத்தொரு வடிவி லாத வுயருமச் சுதனு நானே
சுத்தமெய்ப் பரமானந்த சுயவுருச் சோதி நானே
யத்தமி யாத நானே யவ்யய மாகின் றேனே. 4

சுத்தசித் துருவ நானே சொப்பிர காச னுனே.
வத்துவா மாத்மா ராம வயம்பெறு மமுத நானே
தத்துவ வகண்டா னந்தத் தனிப்பரம் பொருளு நானே
தத்தொடு நாசமற்றுச் சந்தத மொளிர்கின் றேனுன். 5

பிரத்தியக் குருவ நானே பெருஞ்சித்து வடிவ நானே
வரத்துறு சாந்த னுனே வரன்பிர கிருதிக் கேயான்
றாரத்தமின் னிலையா யுள்ள சுகவடி வமர னுனே
புரத்தினைத் தினமுங் காணும் பொன்றிலா வடிவ நானே. 6

தத்துவா தீத னுனே தண்பர மான்மா நானே
மத்தியா தீத னுனே மன்பர சிவனு நானே
தொத்துறு மாயா தீதச் சுயபரஞ் சுடரே யான
வத்துவு நாச மற்ற வளம்பெறு மமுது நானே. 7

பெயரொடு வடிவ மற்ற பெற்றிய னுனே நானே
மயலறு சித்தா காரன் மருவுமச் சுதனு நானே
துயரறு சுகமெய் ரூபச் சொரூபனு நானே நானே
யயலற வெங்கு மொன்று மழிவில னுவ னுனே. 8

மாயையு மாயை யின்றன் மக்களாங் காய மாதி
யாயவை யெனக்கெக் காலு மாணையே யில்லை யில்லை
தூயநற் சுவப்ர காசத் துயரறு மேக னேனுன்
றேயகா லாதி யற்றுத் திகழழி விலனு நானே. 9

பின்னமுக் குணமு மற்ற பேரொளி நானே நானே
மன்னுமெய்ப் பிரமா தினன் மருவிடு மெவையுங் காணு
நன்னயச் சான்று நானே நானனி யனந்த ரூபன்
றுன்னுநா னின்ப ரூபன் றுகளழி விலனு நானே. 10

அந்தரி யாமி யாய வருமொரு வடிவ நானே
நந்தலில் கூடத் தன்ஞன் நான்சரு வகஞ கின்றேன்
பந்தமில் பரமான் மாவின் படைப்பறும் படிவ நானே
யந்தமற் ருெளிரும் ஞான வமலமாம் வடிவ நானே. 11

நிட்கள வடிவ நானே நிகாறுஞ் சஞத னன்ஞ
னிட்கிரி யோகத் தோடு நிகழெலா வடிவ நானே
புட்கரம் போல வெங்கும் பூரண முதன்மை யோஞன்
மட்கலில் பிரத்தி யக்க வடிவுள வழிவி லேஞன். 12

துவந்துவ மாதி சாக்கி வடிவமாய்த் துலங்கா நின்றேன்
பவந்தவி ரசல னேநான் பனுசஞ தனனு நானே
சிவம்பொலி சருவ சாக்கி வடிவமாய்த் திகழ்வ ஞனே
சிவதம்பற் றிடவுங் கூடாச் சிதைவிலாச் சுதையு நானே. 13

திகழ்ப்ரஞ்ஞா னகன னேநான் செறிவிஞ்ஞா னகன னேநா
னிகழ்தருங் கருத்த னல்லா விரும்பெரும் வடிவ னேநான்
மகிழ்தரும் போக்தா வாக மருவிடா வடிவ னேநான்
புகழ்தரும் பூன்ற மாகிப் பொன்றிலா வடிவ நானே. 14

வருநிரா தார மான வடிவொடும் வயங்கு வேஞன்
சருவவா தார ஞகிச் சத்திய ஞனே யாவே
னிருமல வாத்ம காம நிகாறும் வடிவ நானே
கருமமிங் கெவையு மற்ற கழிந்திடாப் பரம ஞனே. 15

தாபமும் மையுமி லாத தனிவிகிர் முத்தனே நான்
பாபமா ராக மூன்றின் பற்றறு வடிவ நானே
யாபத வவத்தை மூன்றின் சான்றதா யமர்கின் றேஞன்
மாபல பிரம நானே மரணமில் வடிவ நானே. 16

திருசியந் திருக்கே யென்ஞத் திகழொன்றற்கொன் றுவேருெம்
பொருளிரண்டுள திருக்கோ பொன்றிலாப் பிரம மாகுந்
திருசிய மாயை யாகுந் திரந்திர மெனவே யெல்லா
விருக்குகண் முடிவிற் போற்றி யிலங்கு டிண் டிமம தாகும். 17

சாக்கியஞ் சான்றை யிங்ஙன் றனித்தனிப் பிரித்து நோக்கிச்
சாக்கியா னெனவே நித்தந் தனையெவ னறிவா னன்றே
வாக்கிய முத்தன் வித்து வானுமிங் கவனே யென்றுத்
தேக்கிய மறையி னீற்றிற் றெரிக்கும்டிண் டிமம தாகும். 18

கடபட குட்டி யாதி காண்புறும் பொருண்மற் றெல்லாந்
திடமணை யன்றி யென்றுந் திரணமு மில்லை யாங்கே
படர்தரு சகங்கள் யாவும் பரசிவ வடிவே யென்று
விடரறு சுருதி யீற்றி னிலகுடிண் டிமம தாகும். 19

சத்தியம் பிரம மாகுஞ் சகத்திது மித்தை யாகு
நித்தியப் பிரம மேதா னிகழ்த்துயி ரனிய மன்று
வித்தினு லறியத் தக்க தின்பநன் னூலை யென்று
மெத்தவு மோத்தி னீற்றின் மிழற்றுடிண் டிமம தாகும். 20

உள்ளொளி வெளியி லுள்ள வொளிபிரத் தியக்கி னுற்ற
தெள்ளொளி மாயைதற்குந் திகழ்பாஞ் சோதி சோதி
பொள்ளலி ருனே தானுய்ப் பொலியொளி யாத்மச் சோதி
விள்ளறுஞ் சிவமே யானு கின்றனன் விமல னுணே. 21

சங்கர குரவ னருடரு மிதனைச் சந்தத நின்பதந் தொழுதே, வெங்கட முனிவன் முதலவர் பணியும் வீரமா தவநின தருளா, லிங்கிதை யரிய செந்தமி ழலங்க லியற்றின னிலங்குமற் றிதனைத், துங்கநின் புயத்தி லணிந் தெளி யேற்குத் தூய விந்நிலையுற வருள்வாய். 22

ஸ்ரீ பிரஹ்மநாமாவலி முற்றிற்று.



ஸ்ரீ கணபதி துணை.

சிவ மயம்.

ஸ்ரீசிதம்பரஞானதேசிகர்

# நெஞ்சுவிடு தூது.



## காப்பு.

### வெண்பா.

பூமாது நாமாது போற்று மிருவர்புகழ்
கோமான் சிதம்பரநா மக்குரிசிற்—சீமான்மே
னெஞ்சுவிடு தூது நிகழ்த்தச் சமிவனம்வாழ்
கஞ்சக் கரிமுகன்றாள் காப்பு.

சீரா ரதீதசுகச் செல்வியைச்செய் கன்மமிலாப்
பேரார் திடஞானப் பேரரசை யோராரு
மத்துவித மெய்ப்பொருளை யந்நால்வர் பின்விசயன்
புத்தே ளவர்க்குரைத்த புத்தேளீர் சித்தர்குழாங்
கற்பகத்தி னீழற் களிப்போர் கணக்கிலதாம்
நற்சிரங்க ணுற்றுழலு நாகரொடு பொற்புமறை
ஆகமங்க ளார்மிருதி யானபுரா ணங்களெலா
மூகமுடன் சொன்னினைவுக் கொண்ணாத வேகமே
சத்தியமே சிற்கனமே சாந்தமே வானந்த
நித்தியமே நின்மலமே நீக்கமிலா வத்துவித
மான ரசமே வதிலிலங்கு மெய்ச்சுவையே
மோனமே ஞாதி மூன்றுமிலாப் பானுவெனத்
தோத்திரஞ்செய் தேத்துஞ் சுயம்பிரகா சச்சுடரே
பூத்தனிலே யெல்லோரும் போற்றிசெய வாத்தவமா
யாரா வருளுருவு மன்புமரி தாந்துறவுந்
தீராத் துயரகற்றுந் திண்ணறிவு மோராத

வான்கன்னற் பாகுசல மானவுருப் பேருறல்போ
லூன்கண்ணிற் காணவுநா வோதவுமே தான்குனே
பேருருவு கொண்டருளும் பெம்மான் பவத்துயரைத்
தூரவகற் றும்பெரிய துய்யவிறை கோரமுற்ற
வஞ்ஞான வல்லிருளைப் போக்கு மருட்சோதி
மெய்ஞ்ஞானக் கண்ணளிக்கு மெய்வேதம் பொய்ஞ்ஞானக்
காமாதி யென்னுங் கடும்பகையைத் தீர்த்தருளுங்
கோமானு ஞானவினே தக்குரிசி லேமாக்கு
மாத்திரமில் லாநூல் வழியகற்றி மாட்சிதருஞ்
சாத்திரமார்க் கஞ்செலுத்துந் தக்கதந்தை சீர்த்தியிலா
மங்கையெனு மாநரகின் வாசற் கதவடைக்குந்
துங்கமுறு பற்றின் றுணிதுறவு பங்கமுறு
சுட்டுவான் சுட்டுபொரு டோற்றுவிப்ப தொன்றுமிலா
மட்டிலா ஞான மணிவிளக்குக் கிட்டவொணு
வானந்த வெள்ள மடங்காத ஞானவெளி
தானந்த மில்லாத் தனிக்கரும்பு வான்வந்த
தேவாதி தேவரெலாஞ் சென்றும்பின் கொண்டுநிதம்
பாவாற் றொழுதேத்தும் பாதத்தோ னேவாது
வாழ்த்த வணங்க மனதிற் றியானிக்கப்
பாழ்த்தவிருள் போக்கும் பரஞ்சோதி தாழ்த்தலிலா
நல்லோர்க் கெளிய நவமணிநன் கில்லாத
பொல்லார்க் கரிதாய பொற்புதையல் பல்லோர்க்குந்
தன்னையுந் தன்னிடத்திற் றங்கு பொருளினையு
மன்னைபோ லீயு மருள்வள்ளல் பன்னுந்
தளையாம் புரமூன்றிற் றங்கியள வில்லா
விளையாடு கின்ற விநோதன் கிளையாய
நூறாண்டு சுற்பாந்த நுண்ணறிவாற் றீருடன்முன்
பாரா துறையும் பழைமையோ னாறுறக்
குற்ற விகார முறையா துறைந்ததிதத்
தற்றமிலா தான வவிகாரி பற்றுன
வைங்கோச மென்னு மணிமாடத் துள்ளுள்ளே
தங்கியெல் லாங்காணு சருவஞ்ஞ னங்கள்

பெருவாழ்வு ஞானப் பெருங்களிப்புப் பேரா
மருளைக் கரிதா மருந்து திரிதலிலா
தெல்லா மிருக்க விறையுமிலா தேகமென்றே
சொல்லாமற் சொல்லுந் துரைச்சித்தன் கல்விதனத்
தாரேனுங் கண்டா லடிவிழுந்து மெய்ந்நடுங்கிச்
சீரேது மின்றிநிற்குஞ் சீருடையோன் சாரெனையோர்
பண்டுசெய்த மெய்த்தவமே யின்றுபகர் சற்குருவாய்த்
தொண்டுசெய வந்தருளுந் தொல்குரவன் சண்டன்கைப்
பாசப் பிணிப்பகற்றும் பாங்கான மெய்க்குலிச
மாசைமுதன் முப்புரத்துக் கானகை தேசுபெற
மூலத் தலத்தின் முகிழ்த்து மதோமுகமாய்க்
காலனலை மூட்டியினிக் கண்வளருஞ் சால்வெகுளிக்
கட்செவியை மெல்லக் கலைத்தெழுப்பி யாறிடத்தும்
பட்சமுடன் பார்த்துப் பகர்மனதால் லக்ஷியச்
செழுமா மதியமுதந் தேக்கித் திளைத்தோர்
நழுவுசரை சாவகற்று நல்லமுதந் தொழுமா
றமரக் கடலைக் கடைந்து தருமமுத
மமரு முபய வமுத மமர்செய்யுங்
கற்பாந்தத் தேகுங் கருது மமுதம்போற்
பொற்பா யமைந்தேகாப் புத்தமுத மற்புதமாங்
கொற்றவா ளீசன் குரைகழலைப் பூசிக்கு
நற்றவத்தோன் கன்னிகைக்காய் நன்செய்வயல் குற்றமற
வாணவமாம் பாசத் தழுந்தப் பிணிப்புற்றுக்
காணரிதாந் துன்பக் கடல்கடக்கத் தோணுமற்
றங்குமுயிர்ப் பைங்கூழ் தழைப்பத் தனுவாதி
சங்கையிலா தாகினுற் சாதனங்க டங்கச்
சரியைகிரி யாயோகந் தான்மூன்று மாகி
யரியகுரு சங்கமநா லாகிப் பிரிவுபெறு
நற்சிரவ ணதியாய் நண்ணிப் பரமான
சிற்சுகமா ஞானமழை சிந்தியருள் பொற்புமிகும்
பச்சை நிறமும் பவளவாய் வெண்ணகையுங்
கச்சிறுக்கு மார்புங் கழைவாகுஞ் சொச்ச

மதிவாண் முகமு மலர்க்குழலுந் துய்ய
கதியுதவு செய்யவருட் கண்ணு மதிசயமா
மஞ்சுகங்க டங்கி யரற்றுங் கரமலரும்
வஞ்சியிடை மேவுமணி வண்டுயிலுந் தஞ்சமென்றோர்க்
கின்பந் தரும்பதமு மேழே ழுலகனைத்து
மன்புடனே பூத்தளிக்கு மன்னையாய் நன்குதருஞ்
சச்சிதா நந்தத் தனிமுதலாய்த் தங்குமறை
யுச்சியினில் வாழு முரவடிவா யச்சமற
நாற்றிக்கு முக்கால நண்ணு வசத்துற்ற
பாற்றிகழு நொய்ய படிவமற மாற்றிலாத்
துன்பமெனு மங்குற் றொகையான் மறையாமன்
மென்புன் னுனிபோன் மிகநொய்தாய் மன்பயிலு
மெல்லாமா யல்லவுமா யேகமாய்ச் செஞ்சுடராய்
நில்லா யெனவருளு நேசமுறு நல்லார்
புகழ்முத்தி ராமப் புனிதனுள மாய்வாழ்
திகழுற்ற நெல்லையெனத் தேரும் பகருற்ற
மாதேவி யம்மை மகிழ்வுற்றுக் காத்தமலர்ச்
சீதேவி வாழ்கழநிச் செம்பதியான் பாதபங்கண்
மொய்த்தமலர்க் காவு முளரிநிறைக் காவுமிருல்
வைத்தமலர்க் காவும் வளமுடைய பைத்தொருமூ
வானபழக் காவு மமர்குறிஞ்சி யுண்ணின்று
மானமிலா தான மலைக்குறவ ரானபடி
கோவென் றொலிக்கக் குடில்சாடி மற்றவர்க
ளாவென் றுரைக்க வகல்பொருப்பை மேவுமொரு
பந்துபோ லாடிப் பணையகிற்சந் தந்தகர்த்து
நந்திடமால் யானையுழை நாதமுடன் சிந்திக்
கழைமணியுங் கோட்டுச் கரிமணியுஞ் செய்ய
புழையெயிற்றுப் போகி மணியுஞ் செழிய
தரங்கத்தாற் றள்ளித் தளிர்நிறச்செம் பாலை
யுரங்கெடவே செய்தே யுயர்சீர் வரம்புரையாச்
சீதைக் கிறைப்பகழி செல்லுவபோற் சென்றுநறுங்
கோதைக் குலவாயர் கூடியுறு மோதரிய

முல்லை புகுந்திதழ்சூழ் முல்லை வலிபறித்தங்
கெல்லையற வீசி யிரும்பெரிய நல்ல
ததிபானெய்ச் சாடி தகர்த்துத் தவள
மதிபோல் வதனியர்வாய் கூவப் பதிதானு
மான்கொட்டின் மேவியவி ழக்கமறிக் குட்டியுடன்
ருன்கட்டு நல்ல தகர்தன்னைக் கோன்கட்டுங்
கட்டோடே சாடிக் கலக்கிக் கடிதேகி
மட்டேர் மலர்ப்பணைசூழ் மாமருதங் கிட்டியினி
வெள்வா யுறைமள்ளர் வீங்குமுலை மாதரொடு
நள்ளிரவிற் றுஞ்ச நனிமேவிக் கொள்ளையிடுஞ்
சோரரைப்போ னெஞ்சந் துணுக்கிட் டலறிடச்செய்
தேரிகுளங் கேணி யெலாநிறைத்துக் கோரமுட
னெய்த லணுகி நெருங்கு பரவர்குழா
மைவரையிற் போர்செய் வலைமரமுங் கைவள்ளந்
தூளிபடச் சாடித் துணையில்ரத் ஞகரத்து
நீளுறவு கொண்டு நிகரற்றுக் கோளகல
வந்தாடு வோர்க்கு வரம்பின்மனச் சுத்தியுடன்
றந்தாப மூன்றுந் தவறச்செய் திந்தவுல
கெந்தவுல கந்தவுல கெல்லாம் புகழ்பெரிய
நந்தவறு வீட்டின்ப நல்குவது மந்தமறு
கற்பாந்த வெள்ளத்திற் காணரிதாய்த் தாழ்ந்துமிகப்
பொற்பா யமைந்தளவு பூணுது விற்பொலியும்
விண்ணோ ருரகர் வியன்புவியோர் வித்தகத்தோர்
நண்ணரிய யோகத்தோர் நன்குணர்ந்தோ ரெண்ணரியோர்
போற்றிப் புகலரிய பூரண னந்தவெள்ள
மேற்றமிகு நெஞ்சிலெழுந் தெவ்விடத்து மாற்றரிதாய்
மன்னிப் பெருகியெழும் வண்மைபோன் மாமதுப்பேர்
நன்னுற்று வந்த நதியுடையான் பன்னுற்றுப்
பேருறுமா மன்ஞதிப் பேதம் பதினென்ருத்
தேருறுமா னந்தந் திவலையா யேர்வுபெறுந்
தானந்த மின்றியே சாற்று முவமையிலா
வானந்த மென்னு மணிநாட னீனமுடன்

பொன்றும் வடவைக் கனல்படரப் புன்னடுக்க
மென்றுஞ்செய் கால மெனுங்கடலிற் றுன்றும்
விசுவமெனும் பன்ன திகண் மிக்குயிராந் தொக்க
விசை திரையோ டொன்றி மிகாமே யிசையுமொரு
வாழியினை யாசமனஞ் செய்யு மகத்தியனு
மூழியினும் பேரா துயரான்மா வாழுஞ்
சமதமங்க ளாம்விரைசேர் சந்தமகி றந்த
மமாருளன் பாமலர்க்கா வாறும் பமாமுறை
மாமலர்சூழ் சோலை மகிழ்விளங் கால்வீசு
மாமவிரோ தம்பொருமை யாலசையா வேம
வுதாரமிகு மோர்வென் றுரைமலைய மென்னுங்
கதாவுயர்சித் தாள்சூழ் கனங்கிரியா னிதானமுமாய்ச்
சந்ததம்வே தம்பரமாய்ச் சாற்றுவதுந் தாரணியி
லந்தணர்தீ வேள்வியிலர்ச் சிப்பதுவு மெந்தவுல
கெல்லா மயன்முதலோ ரேத்துவதும் யோகத்தா
னல்லார் மனமொருக்கி நாடுவதுஞ் சொல்லுமிடத்
துன்னையே யென்றின் புறுநழுவிற் சொற்புனையுந்
தன்னிகரிற் றெண்டர்கவித் தாருடையா னன்னியமாய்க்
காணுமுரு நாமமெலாங் கானலெனக் கண்டுசுக
மாணுருவாய் நின்றமன வாம்பரியான் பேணுமொரு
சாந்திமுத ஞன்குந் தனிப்பதமாய்ச் சாங்கியர்கன்
மாந்துமியோ கந்தவள மாமணியோ டேந்தி
விவேகவய் ராகமெனும் வெண்கோடு பெற்றுத்
தவாதகுழை தானந் தவமா யவாவறுக்கும்
பத்தி சிரத்தையெனும் பாங்கான நல்விழியோ
டத்திபா திப்பிரிய மாங்கடத்தோ டுய்த்தலிலா
மாயையென்ப தேதுமிலை மாபரமே யுள்ளதென
வேயும்வகை நீட்டு மெழிற்காமு மாய்தலெனும்
வாலினல் வாசனையீ வந்துமரு வாதகற்றும்
போலியாம் யானெனதாம் பொய்ப்பாசங் காலிசெயுஞ்
சீவே சுரசகமாஞ் சேருமுப்பத் தைந்தினையு
மாவ னுடன்கவள மாயருந்துந் தாவா

தகண்டமெனுஞ் சீர்வாயு மாதிமறை காணு
தகண்டிதமா யல்லவுமா மங்கம் வெகுண்டுவருங்
காமா திகளென்னுங் கத்துருவாஞ் சத்துருவைப்
போமாறு செய்யும் புகல்வலியோ டேமாக்குஞ்
சத்தமுத லைந்தெனுமோர் தன்னிழலைத் தான்சுழிக்கும்
புத்திவிகற் பங்களெலாம் போக்குவிக்கு நித்தியமாஞ்
சொச்சொருபந் தன்னிற் சுகித்துமற வாதிருக்கு
மச்சமிலா ஞானமெனு மானையான் றுச்சமிலா
முத்தாப மென்னு முதுபசியால் வெம்பிவந்தோர்க்
கத்தாபம் போக்கு மருட்கொடியான் சித்திதருந்
தாவாப் பிரமமுடி சாற்றுந் தனிப்பதமார்
மாவாக் கியமென்னு மாமுரசோன் பூவாற்கற்
றங்குவோர் தம்மடியார் தம்மடியார்க் கஞ்சமிக
வங்கங் குறச்செலுத்து மாணையான் றங்குலகோர்
சிற்சபையி லாடுந் திருவுருநா வோதவந்த
நற்சிதம்ப ரேசனெனு நாமத்தான் றற்குரிய
கன்மங்கள் சன்மங் கணக்கிலவா யுற்றதனு
னன்மனமுந் தெய்வமதை நாடலினற் பன்மனமு
மில்லா மனமுமுற்றே யெங்குமாய்ச் சின்மயமா
யல்லா வடிவா யவயவமாய்ப் புல்லா
வயன்மா லரனோ டருக்கன் முதலோர்
வியனிலுப சாந்தராம் வேலை பயனுர்
சதோதிதமாய்ச் சாந்தமாய்த் தங்குபிணி யில்லாக்
கதாவுலக மெல்லாங் கலந்து சதாவா
யெல்லா மியற்று மிரும்பிரம மேயுளதே
சொல்லா ரிலக்கணங்கள் சூழரிதாய் நில்லாத
மூலப் பகுதி முடையுடலீ ருவனைத்துஞ்
சாலப்பொய் யென்றே தகுந்திடமா யேலப்
படிகம்போ லாகாப் பசர்மணிபோன் மேவி
முடியுமிக லோகபா முற்று மடைகின்ற
வைம்புலன்க ளெல்லா மசுத்தா தி யாய்க்கண்டு
வம்புதவு வாந்தா சனமெனவு மம்புவியி

ஞடா மலமுவர்நீர் நஞ்சமென வுங்ஙரகங்
கேடான தீயெனவுங் கிட்டாது வீடார்
பகர்திரண மாய்க்கண்டு பற்ருது நன்ரு
யகமமதை போக்குமட்ட வங்கம் புகும்வலியாற்
சித்த நிரோதங் தினம்விவகா ரச்செயமெய்ப்
புத்தி மறப்புதவும் போற்றரிய வுத்தமமா
முக்காலச் செய்கையினை முன்னுதலா னிர்ப்பயனு
மக்கால மில்லா வனித்தியமு மிக்கா
ஞெருங்கறிந்து வூட்டுதலு முன்னிவிடுந் தானு
மருங்குவரு தீங்ககல மன்னு மருங்கூர்மத்
தன்மைபோ லிந்திரியந் தாவாப் புலமதனி
னன்மையாங் கோளகத்தை நண்ணுதலும் பன்மையாங்
காமாதி துக்கசுகங் காணவரிற் காமாதி
போமாறு விட்டதனைப் புல்லுதலு மேமாக்கும்
பொன்கருப்ப ஞதி புகலுபசா சந்தணர்க
ணன்ககலு நீச னகுகோவும் பன்முட்க
டங்குசெடி யீருய்த் தகும்வினையால் வந்துதவு
மிங்குபயம் விட்டே யெழில்வினையைத் திங்களணி
வேணியாற் கீந்து விடுவதுவும் வீயுமனங்
கானறிவில் சங்கங் கலவாது பேணுமொரு
வாசா னுரைத்த வணிபொருளை நாடுவதுந்
தேசார் குருநூற் சிரத்தையது மாசேது
மில்லாத சாதுசங்க வேற்றத்தா லின்பொருளைச்
செல்லார் தலைரோமத் தீயவன்போ லல்லாத
பாலைவனஞ் சென்ருேன் படுவபோல் வெம்பசியா
ஞலு தினமுற்ருே னசையுறல்போற் சாலத்
தரியா விருப்புந் தவறிலின்ஞன் மேவி
யிரியாமுத் தாப வெரியாற் புரியத்தி
யின்றித் துவள்கிருமி யின்செயல்போல் வெம்பிமிகக்
கன்றிப் பவமடைந்த காரணமென் றுன்றுபவ
முற்றநா மார்நீங்கு முண்மைவழி யாதெவரைப்
பெற்றதா லற்றுவிடும் பேருகுங் குற்றமற

வாராய்ந்து சால மணுகுமுழை செல்லுவபோற்
பேரா மனைவிதனம் பிள்ளையெனுந் தீராத
வாசையெனுங் கட்டை யகற்றிக் கடிதேகி
மாசுதவு மாசானை மன்னுது யோசித்துப்
பாசப் பிணிக்குப் பகைவராய்ப் பண்டிதராய்க்
காசுற்ற தோடங் கழன்றவராய்ப் பேசுற்ற
வின்னொருவன் றன்னை யிடருறுவா னென்பதிலாத்
தன்னிகரிற் பூமன் றனம்போக · மன்னு
முறிகிரண மென்னு முடிவிலின்ப போகத்
தறிவுடைமை யோடா ரருளும் பிறிவி
லகமுடைமை சாந்த வணியுடைமை ஞாலந்
தகவுதுதி செய்யுந் தகைமை புகுநல்
லமுத கிரணமுகு மான மதிபோ
லிமிள்பூ ரணமுடைமை யின்போ டமிழ்செய்யும்
வாதனையாஞ் சாலத்தை மன்னுபுந்தி யாங்கட்கங்
கோதுறவே வீசுங் குணமுடைமை பாதகஞ்செய்
தீயமன மாவைத் திகழ்மனமா வால்வென்று
தூயறிவாய் நிற்குந் துணிவுடைமை யேயவெலாந்
தானு முடைமை தனக்கயலில் லாவுடைமை
யானலு மாகா வழகுடைமை நீநானென்
றெண்ணுஞ் சகபேத மெல்லாந் தரும்வடிவாய்
நண்ணு முடைமைதகு நாவுடைமை கண்ணுக்குங்
கண்ணா யுறையுடைமை கானலெனக் கண்டவையு
நண்ணா வெளியியற்று நன்குடைமை யெண்ணுமொரு
தன்னிலே யெல்லாமுந் தங்குவதாய்த் தானெங்கு
மன்னி யிருக்கும் வளமுடைமை பன்னுதொழிற்
பந்த மனத்தையம் பாழ்படுத்து மப்பொருளாய்
நந்தலிலா வான்மாவாய் நற்சிவமாய்த் தொந்தனைக
ளில்லா வறிவி லெழுந்துசகத் தந்தமெனுஞ்
சொல்லேது மில்லாத் துணிவுடைமை புல்லலிலா
வாசைதருங் கோப மளிக்கும் பயமுதவு
மோசமுறு நாசமதை முன்னீயும் பாசமெனு

மாபத் தனைத்து மருகே யுறச்செய்யும்
பாப மனைத்தும் பணிப்பிக்குந் தாபத்தே
வீழ்க்குங் கொடுநரகின் மேவுவிக்கும் வீண்பிறப்பி
லாழ்க்குமகல் சங்கமிலா வாணுடைமை தாழ்க்கின்ற
பந்தம்வீ டில்லைப் பரம்பொருளு மென்றுரமா
யந்த நடுமுதலி லாசானைப் புந்திதனிற்
றேர்ந்துளத்தி லன்புமிகத் தேங்கிவெளி பொங்குவபோற்
கூர்ந்தவிழி நீர்சொரிந்து கொண்டுமல ரேந்துகையிற்
பூதவிருள் போக்கும் புனிதமதி யின்கிரணச்
சீதவொளி போலதின்மின் சேரொளிபோற் பேதவினை
யோட்டுந் திருநீற்றை யுத்தூ ளனஞ்செய்து
பூட்டுந் திரிபுண் டரம்புனைந்து நாட்டுமொரு
வீரர்பகை வென்று விசையம் பெறவிரைத்தார்
சாரும் புயமணிந்து தக்கமஞ்ச லாருமெழிற்
பாவாடை கட்டிப் பரிவோடு செல்லுவபோ
லாவா வெனவுரைக்க யாவர்களுந் தாவா
விரத்தியுள மாசுத்த வீரனே காணிற்
றிரித்திடச்செய் மாதர்பகை செல்ல வுரத்தக்க
மாலை யணிந்துசெக்கர் வானம்போற் காவிதுகி
லுலு முழமணிந்து நாடாது சாலத்
தரியாது சென்றணுகித் தண்மலர்தூ யன்பாய்ப்
பரியாவூன் மண்பொதியப் பாரிற் றிரியாத
தண்டம்போல் வீழ்ந்துசிரந் தன்மேற்கை கொண்டனந்தம்
பண்டைவினை நீக்கும் பரம்பரனை மண்டி
வலம்வந்து போற்றி மறுபிறவி போக்கத்
தலம்வந்த தற்பரனே யென்று கலனின்றி
யேத்தியே வீழ்ந்து மெழுந்தும் வலம்வந்துந்
தோத்திரஞ்செய் தும்பனிநீர் தூற்றுவித்தும் பாத்திரனென்
றுள்ளத் தடைக்க வுணருங் குறிதெரித்து
மெள்ளற்ற நாற்பணியை யெய்துவித்துந் தெள்ளுற்ற

சாத்திரத்தாற் றீயணுகுந் தன்மைபோற் காத்திருந்து
சீர்த்திகழு ஞானச் சிதம்பரனும் பார்த்திபன்றன்
பாதாம் புயம்பெற்றுப் பண்டையிரு டண்டித்திங்
கேதாகா தாகுந் திரமெய்திக் கோதாகு
மெல்லாந் திவலையெனு மின்புற்ற வன்பினரும்
பொல்லாப் பிணிப்பகையைப் போக்குவிக்குஞ் சொல்லார்
கெருடத் தியானங் கிடைத்தாற்போ லென்று
மருவுபய மற்றுமய லற்றுப் புரிசெய்கை
மாலோ னியற்றும் வளப்பம்போ லேமன்னிக்
காலேநீர் தீமண் கலந்திருந்தும் பாலேது
மில்லாத விண்ட னியற்கைபோற் காமாதி
பொல்லாக் குணங்கள் பொதிந்தாலும் புல்லுமனம்
பற்று தொருபொருளின் பாவனையை விட்டுப்பின்
மற்றோர் பொருளறிவு மன்னுங்காற் றுற்றவிரு
மத்தியமாய்க் கற்பனைகண் மாண்டதாய்க் கற்போன்று
சித்தவிகற் பங்களது சேராதே யித்துவித
மில்லா வடிவா யிருக்கு மனுபவத்தே
யல்லா தகமென்று மன்னியமே புல்லா
துயர்சாந்த முற்றே யுறைமதிபோற் றுஞ்சும்
பயனுக்கும் வேறீ பணிகள் வியன்மார்பஞ்
சூழ்ந்துந் தகித்துஞ் சுழல்வித்து மாமேரு
வீழ்ந்தும் வியன்புலத்தே வீழ்வீழ்ந்து மாழ்ந்துங்
கடறிசைக ளெல்லாங் கலங்கினும்வேற் றெல்லாம்
விடுகரும நேரே விடினும் படிறில்லா
வாகனங்க ளாதிசுகம் வந்துறினுழ்ந் தும்மிதந்தும்
போகவிலா மேரு வினைப்போன்றே யேகமெனு
மென்னிடத்திற் றோன்று மிருகினைவின் கற்பனையே
பன்னுமிடத் தில்லை பணியெல்லாம் பொன்னேயென்
றுள்ள திடமுற்றே யோர்பய னுய்கின்றே
யெள்ளு மவனிவனு னீத்துவாங் கள்ளன்
றனைமறப்பாம் வாளாற் றறித்துத் தகவின்
மனைசுதரா குங்குடும்ப மன்னி நனியுற்றுக்

கும்பர் தலையிற் குழவிபுய முற்றிடினு
மம்புவியோர்க் கின்ப மடைவிக்கக் கம்பமதி
னின்றுரைக ளாதி நிகழ்த்துகினு மற்றவர்க்
டென்றுநினை வைப்போற் றுகளில்லாப் பொன்றுவதிற்
சங்கற்பம் வேட்கையனு சந்தான முற்றிடினு
மிங்கற்ப மேனு மிதயத்திற் பங்கமிலா
தெம்பிரான் றுளி விருத்தி மனமசையாத்
தம்பமாய்ச் சீதநிறை தக்கோருங் கம்பமிலா
வத்துவிதம் நீயென் றறைந்தா லகமிதமா
மித்துவிதம் யானெனதென் றெண்ணலெவ னித்துவிதம்
வந்தவா றென்கொன் மருவா தகலும்வழி
யெந்தவா றேது மிரும்பெரிய வந்தமிலாப்
பொல்லாங் கடர்ந்துமிகப் பொங்குகரு வேலயில
நன்மாங் கனியெளிதாய் நண்ணுவபோற் கல்லாத
நாயேற் கெளிவந்த நாதனே தீதகற்றுந்
தாயே யெனையளிக்குந் தந்தையே மாயமிது
யெங்கே யகமிதமா மித்துவிதம் வந்ததிது
யெங்கே யிருந்தொடுங்கு மித்துவிதந் துங்கமறை
சங்கரன்மால் வேதனிவர் சாற்றினதுண் டோதகுமோ
பொங்குஞ் சுழுத்திதனிற் போந்ததுண்டோ யங்கையினி
லுற்றகனி போலெங்கு மொன்றே நிறைதலாற்
சொற்றுவிதம் வந்ததிலை சொல்லுங்கான் மற்றதிது
கனகவட மேருவினைக் கட்டையினிற் கள்ளன்
முனமறைத்தா னென்ற முறைபோற் கனைகடலை
வந்திசுத ஞசமனஞ் செய்தா னெனும்வகைபோ
லிந்தவுரை நன்று மிறைவனே பந்தமெனு
மித்துவித நன்று யிலகலால் யானெனதென்
றத்துவிதம் நீயென் றறைதலெவ னித்துவித
மண்ணினிடைத் தோன்று மாஞ்செடிகண் மற்றவெலா
மண்ணினிடை நின்றுமண்ணாய் மாறுவபோ னண்ணரிய
சாகரண மாதிகட்குச் சாட்சியாந் தன்னிடத்தி
லேகவித்தை யாதிசக மெல்லாமு மாக

வுதித்திருந்து போகுமதை யுற்றறியு நாமே
யுதித்திருந்து போகா துணர்ந்துந் திதித்ததென
வித்துவிதம் நானென் றிருக்குமிம்மா மோகமது
சுத்தமித்தை யாகுந் துறவுடையோய் மித்தையென்றாற்
சுத்தியினில் வெள்ளி துலங்கு கயிற்றரவ
மித்தைபோ லில்லையே யெம்மானே யுற்றறிந்தாற்
கானலினீ ரில்லையெனக் கண்டுமெதிர் நின்றுறல்போ
லூனமிவை நேரே யுறுமுறவோய் கானலென்று
லுற்றவிவ காரத்துக் குண்மையா மோவிவைதாஞ்
சொற்றபிதா மாதா சுதன்மனைவி பற்றுறுவோர்
நான்றனவா னென்றில்லோ னன்றியுளோ னன்றியுளோ
னென்றதவத் தோனதிமற் றாலயமாய்த் தோன்றுலக
மெல்லாமுஞ் சத்தியமா யெங்குமசை யாதிருக்கச்
சொல்லாரு மித்தையெனுஞ் சொல்லாமோ நல்லாய்
யுரையெனுமா சாலத்தா லுற்றவுல கெல்லா
நிரைவிவகா ரத்துற்று நேரே பலவிதமாய்ச்
சத்தியம்போற் காணுவதைத் தானறிய வில்லையோ
சுத்தமித்தை யாகுந் துவிதமெலாம் புத்தியோய்
சாலமென்றாற் காலவற்பந் தானிலகா மற்றுவித
மேலவெகு கால மிருத்தலெவன் பாலனே
சொற்பனத்திற் கண்ட துவிதம்வெகு நாளிருந்து
மற்பமதாய்ப் போக லறிந்திலையோ வற்புதனே
நித்திரைவிட் டாலுலக நில்லாது பொய்யாம்போற்
புத்தியைவிட் டாலுலகம் பொய்யாகு நித்திரையாம்
பொல்லா மயக்கொருவன் பூண்டதுபோ லேயெவர்க்கு
நில்லா மயக்குற்று னீயுரையாய் கல்லாத
பத்தாவான் றன்மயக்கம் பாரிலடைந் தாற்போலச்
சித்தா முனக்குவந்த தென்றறிவாய் சித்தான
நான்மயக்க முற்றதென்றோ நானறிய வோதுமென்னக்
கான்மரமும் வித்துமென்ற காரணமா மூன்மயக்கம்
வந்துவெகு நாளன்றோ மாறுவதெக் காலமென
வந்தகா ரங்குகையி லாயிரநா ணந்தாது

சேர்ந்திருந்துஞ் செய்யவொரு தீபவொளி கண்டளவிற்
தீர்ந்தவகை யாமயக்கந் திண்மதியோய் கூர்ந்தே
யுலகெதுநா மாரென்ன வுற்றுணர்ந்தா விந்தக்
கலகமது தானகலுங் கண்டா யுலகமது
வொன்றிலே தோன்ற வொருவித மாயறித
லன்றி வெகுவா யறிதலெவ னன்றியோய்
சித்தமயக் குற்றவர்கள் செய்யவிழிக் குப்பலவாய்
வித்தகனே தோன்றும் விதம்போலா நித்தனே
நாயேன் றனையாண்டநாதவென திம்மோகந்
தோயாது நீங்கவரு டோன்றலே யாயாத
சங்கற்ப முண்டேற் சகமுண் டவையிலையே
லிங்கற்ப மேனு மிலையிலையே துங்கமனம்
வேண்டினு லுண்டு விடுத்தா லிலவாகு
மாண்டவசத் தோசத்தோ மாமதியோய் பூண்டவெலாம்
பொன்னையன்றி வெவ்வேறு பூடணமுண் டோவென்று
முன்னையன்றி யித்துவித மோதிலை சொன்னேன்
சுசாதி விசாதி சுவகதமு மற்ற
நிசானந்த வத்துவித நீயாஞ் சுசாதிமுதன்
மூவகைக்குந் திட்டாந்த முன்னவனே கூறென்னத்
தாவரமொன் றிற்குமலர்த் தண்கிளைகண் மேவுமரம்
பாடாண மூன்றும் பகருமொரு திட்டாந்த
மாடா மதியோ யறியென்ன நாடும்
நிரவயமாய் வேறுசத்து நில்லா ததனுற்
பரவுமிரண் டில்லையெனல் பாங்காந் திரவுலக
காரணமா மாயை கருதுமுண்மை யாயிலக
வேரில் விசாதியிலா தெவ்விதங்கா ணோர்வரிய
சித்திரிக னெழுதுஞ் சித்ரசத்தி யைப்போலச்
சத்தின்பின் மாமாயை தானில்லை சத்தின்ப
வத்துவித நானென் றறிவா யறிவுடையோய்
நித்தசத்துஞ் சித்துமின்ப நீயென்றுற் சுத்தவது
முப்பொருளா யுற்றுன் முடிபொருளொன் றுமெவிதஞ்
செப்பரிய வெண்மைநெகிழ் சீதளங்க ளிப்புவியி

னீரன்றி வேறே நெருப்பன்றி யாதியொளி
நேரன்று சச்சிதின்ப நீயாகும் பேர்வந்த
தாசத்து மூடமிட ராதியிவை போகமறை
நீசச்சி தின்பமென நின்றுரைத்த மாசுத்த
சத்திஞன் மாமாயை தானிருப்ப தேபோலாஞ்
சித்திஞ லேமாயை சேர்ந்திலங்கு நித்தமய
வானந்தத் தாலுலக மானந்த மாமதைவிட்
டேனந்த மாமுலக முள்ளதிலை யானவொரு
பொன்னைவிட வெவ்வேறு பூடணமில் லாததுபோ
லுன்னைவிடச் சச்சிதின்ப மோரிலிலை நன்மதியோ
யானசச்சி தானந்தத் தத்துவித நானென்று
தீனமிலா தான திடமுற்று ஞானியா
யேதுவந்து போஞலு மேதிலின்ப முற்றுலுங்
கோதிலதாய் நின்று குறைவின்மனஞ் சீதளமா
யத்துவிதா னந்தமதி லாழ்ந்துகரை யின்றியென்று
நித்தமாய் வாழ்தியெனு நின்மலனைப் பத்தியுடன்

சூழ்ந்துகழல் வீழ்ந்தெழுந்து தோத்திரஞ்செய் தேமிக்க
வாழ்ந்தமன மோடு மமர்வருஞ் சூழ்ந்துமிக
நற்பலியேற் றுண்ணு நகுமாண்மை யுற்றேருஞ்
சிற்பலியை யீயுஞ் சிறப்பினரு மற்பனெனப்
பேயனென ஆமனெனப் பித்தனென வும்பிணமாங்
காயவெண மின்றியுளக் கண்ணினருஞ் சேயனெனச்
சாவாதல் வாழ்த றனிமஞ்சந் தாஞதல்
பூவாத லாசையிலாப் புண்ணியரு மோவாது
வாக்குமன மாதி மருவா வகோசரத்தே
போக்குவர வற்றே பொலிந்தோரு நீக்கமிலா
மோனநிலை மேவி முறிதவில்பா டாணமென
வானதொரு காய மமைந்தோரு மானமிக
வைதவரை வாழ்த்தினரென் றெண்ணிமரு வாக்கொடுமை
செய்தவரை நாடாச் செயலினரு முய்தவமா
நிட்டைமுத லொன்றுமிலா நீதியின ருந்நிமல
வெட்டவெளி மேவிவிளே திப்பவரு மிட்டமுட

னின்பமென்ற வெல்லா மெரியெனவு நஞ்செனவு
மன்புளத்திற் கூரா தமைந்தோருந் துன்பதின்மை
மூழ்கி மிதவாத முறையினரு முன்பினேன்றைச்
சூழலிலா துற்ற சுதன்மர்களும் பாழ்படுக்கு
மாமாயை யென்னும் வலைதுணித்துப் பின்றிரும்பாப்
போமாயா தீதமதே புல்லினரு நாமாதி
சாதிகுல மற்றவருந் தங்குமிட மற்றவரு
மோதுதனக் கொன்றில்லா வுத்தமரு மேதினியிற்
ருழ்ந்தெழுந்து சூழ்ந்தருள்செய் தாணுவே நீபுகலென்
ருழ்ந்த மனமுற் றமர்வாருங் காழ்ந்தெங்கும்
பஞ்சக் கருவியெனும் பல்லியங்க டாமுழங்க
மஞ்சுற்ற வோசையும்வா னேறுமென வெஞ்சலிலாச்
சச்சிதா னந்தவுருத் தானே யெழுந்தருளி
யச்சமற வென்னோரை யாளவந்தான் றச்சமுறு
தேகாதி பேதமனத் திட்டிக் கறிவுறுத்த
வேகா மறுசுடரா யின்றுவந்தான் போகாக்
கழனிப் பதிக்கரசன் வந்தான் கருதுங்
குழைநக்குங் கூத்துடையான் வந்தான் சுழலிப்
பிறப்பறுப்பான் வந்தான் பிழைபொறுப்பான் வந்தா
னறப்பழையோ ளுமண்ணல் வந்தான் மறப்புநினைப்
பற்றொளிர்வான் வந்தா னருங்குழவி போலளவிற்
சொற்றகரு மம்புரியுந் தோன்றல்வந்தா னற்றவர்கள்
சூழ்தலைவன் வந்தான் றுகள்பிறவி வாரிதனக்
காழ்வில் புணைவந்தா னூர்மறைக
டாழ்வில்லா
வாகமங்கள் போற்று மருளிறைவந் தானல்ல
பாகனைய வின்சொற் பரன்வந்தான் சோகமறப்
புண்டரிகப் பாதம் பொறிக்கவந்தான் வந்தானே
ரண்டர்களே மாக்கவென்னோ ராளவந்தான் றொண்டுசெயக்
கல்வியுளோர் செல்வக் களிப்பினோ ரேமாப்பைக்
கொல்லவந்தான் ஞானக் குரிசில்வந்தான் றொல்லுலகோர்
தேராச் சிதம்பரநற் றேசிகன்வந் தானென்றே
யாராது சின்னங்க ளார்த்துரைப்பப் போடியார்

சங்கைவட மேரிருபாற் பொங்கியெழல் போற்கவரி
யங்கைகொடு பக்கத் தவரிரட்டத் திங்கமுறு
மாசாவெனம் மண்ண லவனியில்வே றில்லையெனத்
தேசால வட்டஞ் சிலவீச மாசாருஞ்
சாகரண மாதி தவிர்ந்துசுக நிட்டையுறும்
பாகமிலாச் சீதம் பரிவுடனே வாகமொடு
வந்ததுபோ லெண்ணின் மணிகளா லேகுயின்ற
சந்திரவட் டக்குடைக டாநிழற்றப் பந்தமெனும்
வெம்பசியை நீக்க விரைந்தோரே மேவும்வள்ள
விம்பரும்ப ரில்லை யிவனெனழியச் செம்பதுமங்
கண்டா லகலுமெனக் கையா லழைப்பதுபோன்
மண்டுகொடி யின்கொடிபோன் மன்னவே தண்டாது
புல்லுமலர் கொண்டடியார் போற்றுகர மாமேக
நல்லமுத மாரி நனிசொரியத் தொல்பிறவி
யென்னும் பிணிக்கு விரும்பெரிய நல்லமுதே
மன்னுமறை யுச்சியினில் வாழொளியே யின்னறவிர்
பொன்னே மணியே புகன்மணியிற் றேசிகமே
தன்னே ரிணையில்லாத் தண்ணருளே கன்னற்
கனகச் சுனையே கதலிகட்டு மாவே
யினமுற்ற வின்பச் சுவையே யனுபவிக்குங்
காலத் துறுசுகமே காண்பரிய நற்பொருளே
ஞாலத் தரியநெல்லை நல்லுளமே சீலமா
யுற்றமுத்தி ராம னுயிரே கழனியில்வாழ்
சிற்சிதம்ப ரேசனெனுந் தேவேயென் னற்புலவர்
பல்லாண் டுரைப்பப் பவளமணி யாம்பருக்கை
புல்லா தகற்றிப் புனுகுசந்தஞ் சொல்லவையாற்
பூமி மெழுக்கிட்டுப் புகழ்குங் குமக்கோல
மேமமிக விட்டே யிரும்பெரிய தாமநிறை
பூரணகும் பங்கள் பொதிந்துமலர் தூயெங்குந்
தோரணங்கள் கட்டியகிற் றூபம்வைத் தாரணங்க
ளாகமங்க ணூல்க ளமர்புரா ணங்களொலி
மாகர்செவி மூட மனுவேள்வி யாகுபுகை

மேற்கட்டி யென்ன விளங்குதிரு வாழ்மறுகிற்
பாற்கட்டு மாங்கனியின் பால்கதலி மேற்கர்க்கண்
டொவ்வாவா னந்த வுயர்போ தகவெருத்திற்
றவ்வாஞா னத்தண் டவிசேறி யொவ்வாத
ஞானயோ கங்கிரியை நற்சரியை யாதிதவ
மீனமிலா தெங்கு மிவையோங்க மோனச்
சிதம்பரநா மப்பெயர்கொள் சீமான் பவனி
யிதம்பெறவே வந்தருள வெங்கும் பதம்பணியப்
பெற்றமறு குள்ளோர்கள் பேதமுற வந்துவந்து
வுற்றதிவன் மேனியினை யோரிடத்திற் பற்றுமென்னோர்
மாமாயா மோகவள மாற்றவந்தா னென்பாரும்
போமாறில் லாப்புனித னென்பாருங் காமாதி
துற்குணங்க ளெல்லாந் துடைக்கவந்தா னென்பாரு
மற்புதங்கா ணென்றே யருள்வாருஞ் சொற்பிரமன்
மால்காணு வள்ளல் வலியவந்தா னென்பாரு
நால்வேதம் போற்றுநம்ப னென்பாரு மால்நஞ்ச
மன்னார் கொடுந்தீமை யாற்றவந்தா னென்பாரும்
பொன்னார் வடிவைப் புகழ்வாரு மென்னோ
தவமோ வறியேனித் தாழ்வுநிறை தேசப்
பவமோட வந்தானென் பாரு நவமாரு
மெம்மா னுருதே யிருந்தாற் சிவாலயங்க
ளம்மா குளமலர்க்கா வன்பர்மடந் தம்மா
லியன்றசத்தி ரங்க ளெழினல்வர் வாக்குப்
பயின்றவிர தாதிமனு பானீ றுயர்ந்தமணி
சாத்திரங்கண் ஞானத் தனிநிச் சயங்குணங்க
ளோத்துமிலை யென்றே யுரைப்பாருந் தீர்த்தன்
றிருமேனி கொண்டதெங்க ளங்கறவென் பாரு
மருண்மேனி யேயலதென் பாரும் பொருண்மேனி
கொள்ளாதே லென்னோ புகுமறிவே னென்பாருந்
தள்ளா மொழிசரிதா னென்பாரும் விள்ளாத
திமிரமலம் போக்குந் தினகரனென் பாரு
மமரிடம்பூ மற்றதழற் காடே யமரமுறை

கற்பகக்கா மூவர் கருதுமிடந் தீர்த்தநதி
யற்புதமாங் காசி யணிதலங்க எிப்புவிசெய்
தென்னதவ மென்னதவம் யானறியேன் யானறியே
னன்னதுரை நீயென் றருள்வாரு மன்னவா
ளீசனரு ளோநெல்லை யெந்தா யினிதருளோ
பாசமிலா ஞானப் பரஞ்சுடரின் மாசி
லருள்சச்சி தானந்த மானதுரு வென்பார்
தெருளுற்ற செங்கரும்பே யென்பார் மருளற்ற
சத்தசத்தின் மத்தி தயங்கு வடிவமென்பா
ரச்சுருவ மாகவிதே யானதென்பர் மெச்சுமிதை
நாடினுற் கண்ணு னனியறிய லாமென்பார்
தேடினு லும்மறியாத் தேனென்பார் பாடும்விழி
புண்டரிக மென்பார் புருவஞ் சிலையென்பார்
மண்டுநுத லென்னோ மதியென்பார் தொண்டைத்
துவரோ யிதழென்பார் தூவயிர முத்தோ
வமர்வரிசைத் தந்தமா மென்பார் பமரமலர்த்
தேனோ வமுதோநற் றீங்கரும்போ தீம்பாகோ
ஞானு முதமோ நறுங்கனியோ நானு
விசைபாடும் யாழோ விருங்குழலோ வென்பார்
நசையாரும் வாக்கோவியைய நண்ணிப் பசைமேவு
வள்ளையோ கன்ன மென்பார் மன்குமிழோ நாசியென்பார்
வெள்ளையுறு சங்கோ மிடறென்பார் கள்ளவிழுஞ்
செங்குவளை மேவுந் திரண்மலையே வாகுவென்பா
ரங்கையினைக் காந்தளோ வாகுமென்பார் தங்குமெழி
னீறுரத்தைப் பாலுத்தி யென்றே நிகழ்த்திடுவா
ராறிடையை வெண்கிரியே யாகுமென்பார் தேறுங்
கனைகழலே முத்தி கருதுமறை யந்த
மெனவிலையென் றேவியம்பு வாரு மனையவடி
வுற்றமுத்தி ராமற் குரியனெனச் சொல்வாரு
நற்றவர்க ளெல்லோரு நண்ணியே குற்றமறக்
கொண்டாடுங் காலைக் குறுகித் தமியேனும்
பண்டாய நான்மறைசொற் பண்ணவனே மண்டுமழன்

மான்கரந்துங் கண்ட மருவியகா ளங்கரந்துந்
தேன்பரந்த கொன்றைச் செழுமதியம் வான்பரந்த
பாகி ரதிகரந்தும் பன்னுநுதற் கண்கரந்து
மேகா திளம்பாவை யைக்கரந்தும் போகாத
குண்டலங்க ளக்குவடங் கோளரவம் வெள்ளேறு
மண்டுபுலித்தோ னூலெல் லாமறைத்தும் பண்டருளாற்
பேயகலா வெள்ளிப் பெருங்கிரியி னின்றிழிந்து
வாயதொழி லுன்கு மகற்றியே தூயமுதம்
பொன்றுவோற் கிங்ஙன் புகுந்ததுபோற் பொற்கிழிதான்
றுன்றுவறி யர்க்கெளிதாய்த் துன்னுவபோ னன்றிதரு
மாரியிலாக் கால மழைபோன் மருவுடலம்
பாரொழித்து விண்செலவாம் பான்மையைப்போற் சேர்விழி
கண்ணில்லார்க் குற்றதுபோற் காணவரி தாய்க்கனவி [கள்
னண்ணமர ரெல்லா நலிந்திருக்கத் தண்கழனி
யுற்றூர்க் கிரங்கிவந்த வின்புருவின் சாந்தவொளி
வற்றாப் புரண மதிமுகமுஞ் சற்றேனும்
வாகியத்தை நாடா மௌனநிலை யுற்றடியா
ராகமயல் போக்கு மருள்விழியுந் தாகமுடன்
வந்தடைந்தோ ரன்றி மருவினோ ரானந்தஞ்
சிந்துமழை போற்பொழியுஞ் செவ்வாயு நந்தலிலா
முப்பொருளு மில்லை முடிபொருளொன் றேயென்று
செப்புமலர்ச் சின்முத் திரைக்கரமு மொப்புரையாச்
சற்குணங்க ளென்னுந் தனிவடத்திற் கட்டுறுஞ்செஞ்
சிற்கழுநீர் மாலையுறுஞ் சீர்ப்புயமும் பொற்பகலுங்
கள்ளமன நாடளவிற் கொள்ளைகொளக் காணரிய
வெள்ளமரு ளானந்த மெய்யுருவு முள்ளநெகும்
அன்பரகோ தின்றியவர் யாவரெதிர் கண்டளவி
லின்பறிவு சாந்திதரு மின்னடையும் பொன்புலத்தோர்
சித்தர்கள்முத் தேவர் திணிபா தலத்தோரும்
புத்தியினு ணூடரிய புன்சிரிப்பு மெத்தலத்துங்
காண்பரிய மாண்புங் கருதரிய சாந்தமும்வான்
பூண்பரிய ஞானமனப் பொங்கொளியும் வீண்சென்

மனதடக்கி னோர்க்கருளும் வண்மைப் பதமு
மெனவுரைக்கு மாவளப்ப மெல்லா மனமகிழ்வாற்
பார்வைக் கினிய பரிவோடுங் கண்டுபேணிந்
தார்வத் தொடுந்துதிசெய் தாகவெணந் தீர்வுற்று
நெஞ்ச மழிந்துருகி நிற்குங்கான் முன்பினெங்குந்
தஞ்ச மெனவடியர் தாகிற்ப வெஞ்சலிலாச்
செய்ய விழியாற் சிறியேனைத் தானோக்கி
மையலுறப் புன்னகையால் வஞ்சித்தான் றய்யன்
றரும்பேரின் பம்பெறவே தாகமிகக் கொண்டேன்
கரும்பே யனையமனக் கண்ணே பெரும்பெரிய
மூவுலகுங் காணேனுன் முன்னோன்பாற் றூதுவிடப்
பாவனமாம் நீயென்மேற் பாங்குவைத்து வாவலுட
னேகவே வேண்டு மெளியேற் கினியவெலாங்
காகமெனக் கொண்டுதவுங் கற்பகமே பாகமிலா
வென்ற னுயிர்த்துணையே யேழை பிறந்திறந்து
சென்றபொழு தும்பிரியாச் செல்வமே யென்றனுக்கு
வெண்ணிய வெண்ணியவை யெல்லா மினியுதவும்
புண்ணியமே தேனேநற் போதமே நண்ணரிய
வெந்தைநீ தாய்நீ யெழிலா ருறவதுநீ
சொந்தநீ நல்ல துணையுநீ கந்தமலர்ச்
சேறுநீ ரும்போற் செறிதலா லன்றியுள
மாறுறவோர் மித்திரரு மாவரோ வேறுபடா
தென்னோ டபேதமுட னெக்காலு மொத்திருந்தான்
மன்னுலகி லாரெதிர்சொன் மாதவரும் பொன்னுலக
மேவு சுராதிபரும் வேதியனு மாலோனும்
பூவுலகி லெல்லாம் பொலிவோருந் தாவலிலா
வுன்பெருமை யானோத வொண்ணுமோ நால்வேதங்
கொன்கலைக ளாகமங்கோ டாகோடி நன்குறையா
மத்தகய மேறு வரிக்கண் புலிகரடி
சத்தமுறு நாகவசந் தானுத லெத்திசையுங்
கானு துலாவல் கனன்மே லிருத்தல்சல
மானு துறைதலெழில் வானவரைக் கோணு து

வேவலாய்க் கொள்ள விருநான் கொருலோகம்
பாவனமாய்ச் செய்தல் பரகாயந் தாவா
திளமையொடு மெப்போதும் வாழ்தலெண் சித்தி
வளமை யுறலெளிது மற்று மளவின்
மன தடக்கிச் சும்மா வதிதலரி தென்று
பனுவலுப சாரமோ பாராய் கனவசிட்ட
ஞய மனத்தின் செயலே செயலதனு
லோய வொழிந்த தொழிந்ததெனு மேய
வுரைபோ லுலகமெலா முன்செயலே யாகுந்
திரமான பந்தம்வீ டென்னும் பரமான
யாவைக்கு நீமுதலே யல்லால்வே றில்லைகாண்
டாவுலகம் நீயே தவறில்லை யாவலுடன்
வேண்டின லுண்டு விடுத்தா லிவையில்லையா
மாண்டவுன்போல் யாருலகில் வல்லார்கள் காண்டரிய
நீநானய் நானீயாய் நின்றுவெகு நாளுற்றேந்
தேனுவின் பாலுஞ் செறிந்தாற்போல் வானதி
பூதம் புவனம் பொலிவிக்குந் தேசுவிற்குச்
சோதியே சோதிச் சுடர்விளக்கே யாதிப்
பிரமத்தோ டொன்றிப் பிரமமாய் நிற்கும்
பிரமமே வுன்பெருமை பேசும் வரமான
வாத்தன்போ லென்மே லருள்பாராய் நெஞ்சேயோர்
வார்த்தைசொலக் கேளாயென் மாதவமே சீர்த்திமிகு
மன்பேயெ னன்பேயெ னன்பே நினையன்றி
யின்புடனே தூதுக் கிசைவோர்கண் மன்புவியி
லானதா னீயே யருள்சிதம்ப ரேசன்பாற்
றேனையை நீதூது செல்லவே யானினைந்து
கூறினே னெம்மான் குறுகுமிடஞ் சொல்லக்கேள்
தேற னதியுந் திருவடியா ராறுங்
கருத்துடனே சூழுங் கழனிநக ராகுந்
திருத்தமுட னீசெல்லும் போது வருத்தியுடன்
பஞ்ச விடயப் படுகுழியில் வீழாதே
அஞ்சு பொறிவழியிற் சுற்றாதே யஞ்சுதலை

நாகமெனும் பெண்ணரவை நண்ணி வருந்ாதே
சோகமெனு முள்ளாற் றுவளாதே யாகமே
தானுன பாஷாண்டி தன்னேப் பணியாதே
காஞன வாசை கலவாதே நீநானென்
றெண்ணுமத மாவை யெதிராதே கோபமெனு
நண்ணும் வரியுழுவை நாடாதே யெண்ணரிய
வேடணேயாம் பங்க மிசைவோ ருடன்கூடேல்
பாடிசையாந் தீயாற் பதையாதே நாடரிய
பொல்லாங்கு மேவுவழி போகாது போதவழி
நல்லா யினியேகி நால்வேத மெல்லாக்
கலேயாக மாதி கழறுபுரா ணங்கள்
தொலேயா வருளறிவு சூழ்ந்து நிலேயாய
வோருருவாய் மேவினரு முண்மைநிலே யானவருஞ்
சீரறிவாய் நிற்குந் திறத்தோருங் காருருவ
வந்தகர்க்கு நேரே வருட்கண் ணளிப்போருந்
தொந்தமெனு மாமேற் சுடர்வாரு மைந்துவிழி
யுற்றுரைக் கண்டா லொதுங்கி மறைவோருங்
கற்றுப்போ லுள்ளங் கரைவாரு நற்றவரும்
பத்தர்களும் வேத பாராயணரும் பண்டிதரும்
வித்தகமாம் லிங்காங்க மேவினருஞ் சுத்தசைவ
நாயகரு மற்ருேரு நாற்புடையுஞ் சூழநடுத்
தூயணிக்குட் டாவி துலங்குவபோன் மேயமறை
வல்லார்க ளல்வர்முதல் வானேர்கள் யாவர்நடுக்
கல்லாவின் கீழிருந்த கண்ணுதல்போற் செல்லாருஞ்
சிற்சிதம்ப ரேசனெனுஞ் சீமா னிருப்பனெழிற்
பொற்சபையை நாடிப் புளகமுட னற்புதனேக்
கண்டு வணங்கிக் கரையின் றியவருளான்
மண்டடியே னுய்யவெண்ணம் வைத்தானேத் தண்டலிலா
செய்யவடி நாயேன் சிரமிசைவைத் தாண்டானேத்
துய்யவருண் மாரி சொரிவானேப் டையாலோன்

வெள்ளிப் பொருப்பிருபான் மேவுபவ ளக்கொடிபோற்
கள்ளூற்ற
றெள்ளூற்ற பூதி செறிந்திருக்குஞ்
செங்கழுநீர் மாலை திகழும் புயத்தானைத்
தங்க
துங்கவருட் பாவாற் றுதிப்பானை
டிமிரமலம் போக்குந் திவாகரனை யார்க்கு
சமிவனத்துட்
மமிர்தமெலா மீயு மமிர்தைச்
டங்கு மகிமை தனையுரைப்போர் யாவரவர்க்
பங்கமுறு
கங்குபெரு வாழ்வளிக்கு மாரியனைப்
நாயேன் பெரும்பிழையை நாடா தருள்பவனைத்
ரேயாத்
தாயா கியநெல்லை தன்பங்கிற்
திரிபுவ னேசனெனுஞ் சிற்சொருப வாரி
பெருமையுறு
மருவியதின் மன்னிவிளை யாடும்
நற்சிதம்ப ரேசனெனு நங்குருவை நெஞ்சேநீ
யற்புதமே
தற்பரமே வானந்த சாகரமே
நித்தபுத்த சுத்த நிராமயமே பூரணமே
முத்தனே
யத்தனே நற்கழனி யாள்வானே
யென்று வழுத்தி யெறியா லெறிதருப்போற்
மன்றலார்
றுன்றுபடி வீழ்ந்தெழுந்து துன்னுகர
சென்னிமேற் கூப்பிப்பின் சென்றிருகை சேர்த்துநின்று
மன்னுகடைக்
கன்னலே யுன்பவனி கண்டாங்கு
கண்ணேக்கம் பெற்றுக் கரைந்துருகு மாதின்ப
புண்ணுகி
நண்ணு தவித்தையெனு நள்ளிருளிற்
வாடுவளோ மாயையெனும் வாரியொலி யான்மயக்கங்
பாடுமெழிற்
கூடுவளோ வுள்ளங் குமரவேள்
பஞ்ச விடயமலர்ப் பைங்கணைபட் டங்கமெலா
வஞ்சிக்கும்
மெஞ்சி வருந்துவளோ வெவ்விடத்தும்
பையரவ வல்குன் மடப் பாவையெனுங் கோகிலச்சொற்
மையுலக
றுய்யவுளம் போக்கமனஞ் சோர்வாளோ
வாசனையாந் தென்றன் மருவவத னூற்புழுங்கி
மாசகலுஞ்
வீசு பிராணன் மெலிவளோ

சாந்தியெனுஞ் சந்திரனாற் ருபமுறன் ஞாயமோ
போந்தவிரா கங்கொளுத்தல் புண்ணியமோ வேந்தனே
நித்த வநித்தசிறை நின்றுவெளி செய்யவருண்
முத்தனே நீசிறிது முன்னிமிகும் பத்தியுளா
டன்னையே காக்கத் தகுந்தகுமென் றேதுதித்து
வன்னைபோ னிற்பா ரடிதாழ்ந்து சொன்னவெலா
மெந்தையுளஞ் செல்ல விருகைமலர் வாய்முகிழ்த்து
வுந்தன் றனங்க மொடுங்கிநின்றே யந்தமிலா
னின்புற்றுக் கேட்க யிசைத்துக் கடையேனு
மன்பெற்ற வானந்த மாலின்பங் கொன்பெற்ற
வேகாத சானந்த மெல்லாந் திவலையெனும்
போகாத வூழியிலும் பொங்குசுகம் பாகாய
நீநானென் றெண்ணு நிலையி லுறுவசுகம்
வானுதி பூதமுமாய் மன்னுசுக மானுத
பூரண னந்தம் பொலிந்தோங்கப் பொங்குகமழ்த்
தாரன்பா லீயத் தகுமென்றே பேரன்பா
நாயகிக் கீயவென நன்றிதரு மென்மொழியா
னீயிசைத்துச் சம்மதிக்க நீள்புயத்திற் பாயுமெழிற்
செங்குவளை மாலை சிதம்பரதே வன்கொடுக்க
யிங்குறநீ வாங்கி வரவின்று தங்கு
சகலவுல கங்கட்குந் தாதாவாய் வந்தருளும்
புகல்சிதம்ப ரேசன்பாற் போந்தே விகலமிலா
வுள்ளமே தூதுசென்றே யொண்புயத்தின் செங்கழுநீர்க்
கள்ளவிழு மாலைகொண்டு வா.

ஸ்ரீசிதம்பரஞானதேசிகர் நெஞ்சுவிடுதூது
முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசிதம்பரஞானதேசிகர் திருவடிவாழ்க.



வெள்ளிப் பொருப்பிருபான் மேவுபவ ளக்கொடிபோற்
றெள்ளூற்ற பூதி செறிந்திருக்குங் கள்ளூற்ற
செங்கழுநீர் மாலை திகழும் புயத்தானைத்
துங்கவருட் பாவாற் றுதிப்பானை நங்க
டிமிரமலம் போக்குந் திவாகரனை யார்க்கு
மமிர்தமெலா மீயு மமிர்தைச் சமிவனத்துட்
டங்கு மகிமை தனையுரைப்போர் யாவரவர்க்
கங்குபெரு வாழ்வளிக்கு மாரியனைப் பங்கமுறு
நாயேன் பெரும்பிழையை நாடா தருள்பவனைத்
தாயா கியநெல்லை தன்பங்கிற் றேயாத்
திரிபுவ னேசனெனுஞ் சிற்சொருப வாரி
மருவியதின் மன்னிவிளை யாடும் பெருமையுறு
நற்சிதம்ப ரேசனெனு நங்குருவை நெஞ்சேநீ
தற்பரமே வானந்த சாகரமே யற்புதமே
நித்தபுத்த சுத்த நிராமயமே பூரணமே
யத்தனே நற்கழனி யாள்வானே முத்தனே
யென்று வழுத்தி யெறியா லெறிதருப்போற்
றுன்றுபடி வீழ்ந்தெழுந்து துன்னுகர மன்றலார்
சென்னிமேற் கூப்பிப்பின் சென்றிருகை சேர்த்துநின்று
கன்னலே யுன்பவனி கண்டாங்கு மன்னுகடைக்
கண்ணோக்கம் பெற்றுக் கரைந்துருகு மாதின்ப
நண்ணா தவித்தையெனு நள்ளிருளிற் புண்ணாகி
வாடுவளோ மாயையெனும் வாரியொலி யான்மயக்கங்
கூடுவளோ வுள்ளங் குமரவேள் பாடுமெழிற்
பஞ்ச விடயமலர்ப் பைங்கணைபட் டங்கமெலா
மெஞ்சி வருந்துவளோ வெவ்விடத்தும் வஞ்சிக்கும்
பையரவ வல்குன்மடப் பாவையெனுங் கோகிலச்சொற்
றய்யவுளம் போக்கமனஞ் சோர்வாளோ மையுலக
வாசனையாந் தென்றன் மருவவத னாற்புழுங்கி
வீசு பிராணன் மெலிவளோ மாசகலுஞ்

சாந்தியெனுஞ் சந்திரனூற் ருபமுறன் ஞாயமோ
போந்தவிரா கங்கொளுத்தல் புண்ணியமோ வேந்தனே
நித்த வநித்தசிறை நின்றுவெளி செய்யவருண்
முத்தனே நீசிறிது முன்னிமிகும் பத்தியுளா
டன்னையே காக்கத் தகுந்தகுமென் றேதுதித்து
வன்னைபோ னிற்பா ரடிதாழ்ந்து சொன்னவெலா
மெந்தையுளஞ் செல்ல விருகைமலர் வாய்முகிழ்த்து
வுந்தன்ற னங்க மொடுங்கிநின்றே யந்தமிலா
னின்புற்றுக் கேட்க யிசைத்துக் கடையேனு
மன்பெற்ற வானந்த மாலின்பங் கொன்பெற்ற
வேகாத சானந்த மெல்லாந் திவலையெனும்
போகாத வூழியிலும் பொங்குசுகம் பாகாய
நீநானெனன் றெண்ணு நிலையி லுறுவசுகம்
வானுதி பூதமுமாய் மன்னுசுக மானுத
பூரணு னந்தம் பொலிந்தோங்கப் பொங்குகமழ்த்
தாரன்பா லீயத் தகுமென்றே பேரன்பா
நாயகிக் கீயவென நன்றிதரு மென்மொழியா
னியிசைத்துச் சம்மதிக்க நீள்புயத்திற் பாயுமெழிற்
செங்குவளை மாலை சிதம்பரதே வன்கொடுக்க
யிங்குறநீ வாங்கி வரவின்று தங்கு
சகலவுல கங்கட்குந் தாதாவாய் வந்தருளும்
புகல்சிதம்ப ரேசன்பாற் போந்தே விகலமிலா
வுள்ளமே தூதுசென்றே யொண்புயத்தின் செங்கழுநீர்க்
கள்ளவிழு மாலைகொண்டு கா.

ஸ்ரீசிதம்பரஞானதேசிகர் நெஞ்சுவிடுதூது
முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசிதம்பரஞானதேசிகர் திருவடிவாழ்க.

